# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

•Volume : 3 • Issue: 3 • May 2016 • Annual Subcription Rs. 100/- • மலர் 3 • இதழ்: 3 • மே 2016 • வருடச் சந்தா ரூ. 100/-



மூன்று நிலைகள்

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே





நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளின் மீது நாம் தெரிந்து முரண்பட்டாலோ, தெரியாமல் முரண்பட்டாலோ அல்லது தெரிந்து உடன்பட்டாலோ தெரியாமல் உடன்பட்டாலோ அனைத்தும் இயற்கையானது, நம்மை மீறியது, தாமாக ஏற்பட்டது என்று தன்னிலும் உயர்ந்த நிலையாகக் கருதி அவைகளுக்கு முழு சுதந்திரம் வழங்குவதே ஞானத்தின் செயல்பாடு.

– ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?


Sri Bagavath Mission

31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



அட்டைப் படம் : புகைப்படக் கலைஞர் திருச்சி **சுதாகர்**






### கோடையில் இயற்கை சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 4 நாள்

# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

நாள் : **26–05–2016** வியாழன் மாலை **3:00** மணி முதல்
**29–05–2016** ஞாயிறு மாலை **3:00** மணி வரை
இடம் : **House of Peace (Glass House)** அமைதி இல்லம், ஏற்காடு.

- ✦ இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ✦ ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது.
- ✦ உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு **ரூ. 3000/– மட்டுமே.**
- ✦ 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் விரைவில் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

முன்பதிவு செய்யும் வழிகள்:

1) M.O, D.D. (or) Cheque : வரைவோலை (D.D.) அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

2) Direct payment : நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC: HDFC 001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

3) Online Payment : Credit Card or Debit Card மூலம் www.pravaagam.org என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

ஸ்ரீ பகவத் மிஷன்

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் – 3.
கைப்பேசி : 9994205880, 9789165555.

## பகவத் பாதை சந்தா விபரம்

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–**
**ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை **92620 61838** என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



# மூன்று நிலைகள்

இப்படிப் பலரும் கூறுகிறார்கள்:

“நீங்கள் கூறுவது புரிகிறது. அப்படிப் புரிந்து கொண்டதால் எனது பிரச்சினைகளை எளிதாக அணுக முடிகிறது. ஆனால் பல சமயங்களில் நான் புரிந்து கொண்டதையே மறந்து விடுகிறேன். எனக்கு நானே போராடி விடுகிறேன். எனது சிந்தனைகள் என்னை எங்கெங்கேயோ இழுத்துச் சென்று விடுகின்றன. சிறிது நேரத்திற்குப் பிறகு தான் சுயபுத்திக்கு வருகிறேன். அதன் பிறகு எனது புரிதல் நினைவுக்கு வருகிறது. எல்லாவற்றையும் பிரவாகத்தில் விட்டுவிடுகிறேன். நான் புரிந்து கொள்ள வேண்டியதை எல்லாம் சரியாகப் புரிந்து கொண்டுள்ளேனா என்பது எனக்குப் புதிராக உள்ளது. ஏனெனில் புரிந்து கொண்டது போலவும் உள்ளது. புரியாதது போலவும் உள்ளது.”

–இது தான் இவர்களது பிரச்சினை.

சில சந்தர்ப்பங்களில் இது போன்ற பிரச்சனைகள் உங்களுக்குக் கூட ஏற்பட்டிருக்கலாம்.

இவர்களது பிரச்சனைக்கு நாம் என்ன பதில் கூறப்போகிறோம்?

இதற்கு நாம் எந்தப் பதிலையும் கூறவில்லை. பதில் கூறுவதற்குப் பதிலாக கேள்வி கேட்ட உங்களிடமே ஒரு கேள்வியைக் கேட்கப்போகிறேன்.

அது என்ன கேள்வி என்று கூறுவதற்கு முன்னால் அது என்ன வகையான கேள்வி என்பதையும் நாம் பார்க்க வேண்டும்.

நம் மனதின் மூன்று விதமான செயல்பாடுகளைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையின் காரணமாக நம் மனதில் பதட்டம், வருத்தம், பயம், கோபம் போன்றவை ஏற்பட்டு விடுகின்றன. அவை நமக்கு ஒரு நிம்மதியற்ற தன்மையை ஏற்படுத்தி விடுகின்றன. அந்த நிம்மதியற்ற தன்மையிலிருந்து விடுபடவும் நாம் போராடி விடுகிறோம். இவை யாவும் நம்மையறியாமல் ஏற்பட்டு விடுகிறது.

நாம் எவ்வளவோ படித்திருந்தும், எவ்வளவோ புரிந்திருந்தும், நம் மனம் பிரவாகத்தில் செயல்படத் தெரிந்திருந்தும்

நம்மையறியாமல் நாம் ஏதோ ஒரு சூழ்நிலையில் இவ்வாறு மாட்டிக் கொள்கிறோம்.

அந்தச் சூழ்நிலையானது அதன் போக்கில் நம்மையும் இழுத்துச் சென்று விடுகிறது. சூழ்நிலையின் கோரப்பிடியில் சிக்கி நம்மை நாமே மறந்து போய் விடுகிறோம்.

சிறிது நேரத்திற்குப் பிறகு தான் நமக்கு சுய நினைவு ஏற்படுகிறது. நம்மையறியாமல் நாம் நமது உணர்ச்சிகளின் பிடியில் மாட்டிக் கொண்டது தெரிகிறது. உணர்ச்சிகளை எதிர்த்து போராடி விட்டதும் தெரிகிறது.

“அடடா! நம்மையறியாமல் நமக்கு நாமே போராடி விட்டோமே'', என்று எண்ணி நமது உணர்ச்சிகள் அனைத்தையும் பிரவாகத்தில் விட்டுவிடுகிறோம். “அக உணர்ச்சிகளை எதிர்த்துப் போராடத் தேவையில்லை; அவை அவ்வாறுதான் வரும். அவையாக வந்து அவையாகப் போய்விடும். நாமாக எதுவும் செய்யத் தேவையில்லை. அகத்தைப்பொருத்த அளவில் நமக்கு எந்த வேலையும் கிடையாது.”

– இப்படி நாம் நம்முடைய அக இயக்கத்தை முழு மனதோடு ஏற்றுக் கொள்கிறோம்.

நாம் இரண்டு நிலைகளைப் பார்த்தோம். முதலாவது நிலையில் நாமாக எதையும் செய்யவில்லை. அது ஒரு நிகழ்வாகவே – உணர்வற்ற நிகழ்வாகவே நிகழ்ந்து விடுகிறது அந்த உணர்ச்சிகள் – வருத்தம், பயம் போன்றவை. அவையாகவே நிகழ்ந்து விடுகின்றன. அவற்றிலிருந்து விடுபடவும் நம்மையறியாமலேயே நாம் முயன்று போராடி விடுகிறோம். இப்படித் தாமாக ஏற்பட்ட உணர்ச்சிகளும், அவற்றை எதிர்த்து நம்மையறியாமல் போராடி விட்டதும்

– இந்த முதல் நிலையாக உள்ளது.

இரண்டாவது நிலையில்தான் நாம் சுய உணர்வுக்கு வருகிறோம். நம்மையறியாமல் நாம் நமது உணர்ச்சிகளை எதிர்த்துப் போராடுவதையும் அடையாளம் கண்டு தெரிந்துகொள்கிறோம். நம்மை எதிர்த்து நாம் போராடக்கூடாது என்ற புரிதல் உதவிக்கு வருகிறது. நமது புரிதல் செயல்படுகிறது. பிரவாகம் செயல்படுகிறது.

இப்படி நமது புரிதலும், பிரவாகமும் செயல்படும் நிலைதான்

–இந்த இரண்டாவது நிலையாக உள்ளது.

முதல்நிலை முதலில் ஏற்படுகிறது, இரண்டாம் நிலை இரண்டாவது ஏற்படுகிறது.

இப்போது நாம் கேட்கப்போகும் கேள்வி இதுதான்:

இந்த இரண்டு நிலைகளிலும் எது சரியான நிலை?

முதல் நிலையா, அல்லது இரண்டாவது நிலையா?

முதல்நிலையில் நமது அறியாமை செயல்படுகிறது. நமது செயல்கள் யாவும் புரிதல் இல்லாதவாறு செயல்பட்டுவிடுகின்றன.

இரண்டாவது நிலைதான் புரிதலுடன் செயல்படுகிறது; ஞானத்துடன் செயல்படுகிறது.

முதல்நிலை அஞ்ஞானத்துடனும், இரண்டாம் நிலை ஞானத்துடனும் செயல்படுகின்றது.

இவற்றுள் எது சிறந்த நிலை?

முதல் நிலையா?

அல்லது இரண்டாம் நிலையா?

–இது தான் நமது கேள்வி.

இந்த இரண்டு நிலைகளுள் எதனை உயர்வானதாக நீங்கள் தேர்வு செய்யப் போகிறீர்கள்?

முதலாவது நிலை நம்மை அறியாமல் ஏற்படுகிறது. நாம் விரும்பாத உணர்ச்சிகள் ஏற்படுவதும், அவற்றிலிருந்து விடுபட விரும்பிப் போராடுவதுங்கூட நம்மையறியாமல்– Unconscious ஆக ஏற்படுகிறது.

இரண்டாவது நிலை என்பது அங்கே நாமாகச் செயல்படுவது. Conscious ஆக நமது புரிதலுடன் செயல்படுவது.

Unconscious ஆக செயல்படும் முதல்நிலை சரியானா – உயர்ந்ததா?

அல்லது Conscious ஆக செயல்படும் இரண்டாவது நிலை சரியானதா – உயர்ந்ததா?

இந்தக் கேள்வியைச் சிலரிடம் கேட்டேன்.

சிலர் முதல்நிலையைத் தேர்வு செய்தனர். பலர் இரண்டாவது நிலையைத் தேர்வு செய்தனர்.

இன்னும் சிலர் புதிதாக ஒரு கேள்வியை உருவாக்கிவிட்டனர்.

என்னையறியாமல் Unconscious ஆக சில சிந்தனைகள் – உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. அவை சுவாரசியமாக இருக்கும் போது நானே விரும்பி – Conscious ஆகவே அதன் பின்னால் போய்விடுகிறேன்.

– இப்படி ஒருவர் கூறுகிறார்.

“என்னையறியாமல் – Unonscious தாமாக சில சிந்தனைகள் – உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. அவை எனக்குப் பிடிக்காதவை. அவற்றிலிருந்து விடுபட முதலில் என்னையறியாமலேயே விரும்பிப்போராடுகிறேன். அதன் பிறகு அதிலிருந்து விடுபட நானாகவே விரும்பிப்போராடுகிறேன். அறிந்தே – தெரிந்தே போராடிவிடுகிறேன்.”

– இப்படி இன்னுமொருவர் கூறுகிறார்.

நாம் நமது பிரச்சனையை இரண்டு நிலைகளாக எடுத்து வைத்தோம்.

ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் நாம் விரும்பிய அல்லது விரும்பாத உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. நம்மையறியாமல் அதன் பின்னே போய் விடுகிறோம் அல்லது அதனை எதிர்த்துப் போராடி விடுகிறோம்.

– இது முதல்நிலை.

புரிதலுடன் பிரவாகமாகச் செயல்படுவதை இரண்டாவது நிலையாகப் பார்த்தோம். இப்போது புதிதாக ஒரு நிலையைப் பற்றி சிலர் கூறுவதால் புரிதலுடன் செயல்படுவதை மூன்றாவது நிலையாக்கி விட்டு,

அவர்கள் கூறும் நிலையை இரண்டாவது நிலையாக்குகிறோம்.

அதன் படி

நமக்கு ஏற்படும் உணர்ச்சிகளின் பின்னே நாமாக விரும்பிச் செல்வதும்,

நமது உணர்ச்சிகளுக்கு எதிராக நாமாக விரும்பிப் போராடுவதும் இரண்டாம் நிலையாக உள்ளது.

நமது புரிதலின்படி அனைத்தையும் பிரவாகமாக விடுவது மூன்றாம் நிலையாக உள்ளது.

இப்போது மூன்று நிலைகள் உள்ளன.

முதல்நிலையில் உணர்ச்சிகள் ஏற்படுவதும், அவை பின்னால் நாம் போய்விடுவதோ அல்லது போராடுவதோ நம்மையறியாமல் ஏற்படுகின்றது.

இரண்டாம் நிலையில் நாம் அறிந்தே செயல்படுகிறோம். அறிந்தே உடன்படுகிறோம். அல்லது அறிந்தே முரண்படுகிறோம்.

மூன்றாம் நிலையிலும் அறிந்தே செயல்படுகிறோம். இங்குப் புரிதலுடன் செயல்படுகிறோம். ஞானத்துடன் செயல்படுகிறோம்.

முதல் இரண்டு நிலைகளிலும் அஞ்ஞானம் செயல்படுகிறது. ஞானம் செயல்படவில்லை.

மூன்றாவது நிலையில் மட்டுமே ஞானம் செயல்படுகிறது.

இந்த மூன்று நிலைகளிலும் எது சரியான நிலை என வரிசைப்படுத்திக் கூறமுடியமா?

எது முதலாவது தகுதியில் உள்ளது?

எது இரண்டாவது தகுதியில் உள்ளது?

எது மூன்றாவது தகுதியில் உள்ளது?

தொடர்ந்து படிப்பதை நிறுத்திவிட்டு மீண்டும் இன்னுமொருமுறை முதலிலிருந்து படித்துப்பாருங்கள்.

படித்து முடித்தபிறகு இந்த மூன்று நிலைகளையும் வரிசைப்படுத்துங்கள்.

நமது கேள்விகளில் ஒரு சிறிய மாற்றம் செய்யப்போகிறோம்.

இரண்டாவது, நிலை பற்றிய கேள்வியை மட்டும் தற்காலிகமாக ஒதுக்கி வைக்கப்போகிறோம். அந்த இரண்டாம் நிலை பற்றிய கேள்வியை மட்டும் கடைசியாகப் பார்ப்போம்.

இப்போதைய நிலையில் அத்தகைய இரண்டாம் நிலையை முழுமையாக மறந்து விடுவோம்.

இப்போது இரண்டு நிலைகள் மட்டுமே உள்ளன.

முதல்நிலையில் நம்மையறியாமல் உணர்ச்சிகள் ஏற்படுகின்றன. அவற்றோடு நம்மையறியாமல் முரண்படவோ அல்லது உடன்படவோ செய்துவிடுகிறோம். இங்கு அஞ்ஞானம் மட்டுமே உள்ளது.

மூன்றாம் நிலையில் ஞானம் உள்ளது. அனைத்தையும் பிரவாகத்தில் விட்டு விடுகிறோம்.

முதல் நிலை உயர்ந்ததா? – சரியானதா?

அல்லது மூன்றாம் நிலை உயர்ந்ததா? – சரியானதா?

முதல் நிலைதான் உயர்ந்தது.

இல்லை மூன்றாம் நிலைதான் உயர்ந்தது.

– இவற்றுள் எந்தப் பதில் சரியானது?

முதல் நிலைதான் உயர்ந்தது. அது இயற்கையானது. அதுவாக ஏற்பட்டது.

அங்கு அறியாமை இருக்கலாம். அஞ்ஞானம் இருக்கலாம். ஆனால் அது இயற்கையானது.

அதனை நாமாகக் கொண்டுவரவில்லை. அது அதுவாகவே ஏற்பட்டுள்ளது.

மூன்றாம் நிலை என்பது நாமாகச் செயல்படுத்துவது. அங்கு அறிவுடைமை இருக்கலாம். ஞானம் இருக்கலாம். ஆனால் அது இயற்கையானதல்ல, தாமாக ஏற்பட்டதல்ல.

முதல்நிலை செயல்படுவதற்கு எந்த தத்துவங்களோ, கருத்துகளோ, அறிவுடைமையோ, ஞானமோ தேவையில்லை. அது அதுவாகவே செயல்படுகிறது. அது Unconscious ஆக செயல்படுகிறது. நம்மையறியாமல் செயல்படுகிறது.

அதுதான் உண்மையின் செயல்பாடு. இயற்கையின் செயல்பாடு. இறைவனின் செயல்பாடு. யதார்த்தத்தின் செயல்பாடு.

அது செயல்பட எவருடைய உதவியும் தேவையில்லை.

அது நம்முடைய முயற்சியால் ஏற்படும் நிகழ்வல்ல, நாம் நிகழ்த்திய நிகழ்வல்ல.

அது தாமாக ஏற்பட்டது. இயல்பாக ஏற்பட்டது. இயற்கையாக ஏற்பட்டது.

மூன்றாம் நிலை அப்படி அன்று. அது நாமாக ஏற்படுத்தியது. நாம் புரிந்து கொண்டதன் விளைவாக நமது முயற்சியால் ஏற்பட்டது.

அது இயற்கையானதன்று, இறைவனால் ஏற்பட்டதன்று. இயல்பாக ஏற்பட்டதன்று.

அது செயற்கையானது. நாமாக விரும்பி ஏற்படுத்தியது.

ஆகவே முதல்நிலையும், மூன்றாம் நிலையையும் ஒப்பிட்டு ஆய்ந்திடும்போது

முதல்நிலையே உயர்ந்ததாகும்.

இப்போது இரண்டாம் நிலையைப் பற்றிப் பார்ப்போம்.

இரண்டாம் நிலையும் நாமாக Conscious ஆக செயல்படும் நிலைதான்.

நாமாகச் செயல்படும் இரண்டாம் நிலையில் அஞ்ஞானம் உள்ளது. மயக்கம் உள்ளது.

மூன்றாம் நிலையிலும் நாமாகச் செயல்படும் ஆகச் செயல்படும் அம்சம் இருக்கிறது.

ஆனால் அங்கு அஞ்ஞானம் இல்லை. மயக்கம் இல்லை. ஞானமும், சுயபுத்தியும் உள்ளது. தெளிவு உள்ளது.

இந்த இரண்டாம் நிலையையும், மூன்றாம் நிலையையும் ஒப்பிட்டுப் பார்ப்போமாயின்,

இரண்டிலும் எது உயர்ந்தது?

இரண்டாம் நிலையா, அல்லது மூன்றாம் நிலையா?

இரண்டாம் நிலையைக் காட்டிலும் மூன்றாம் நிலைதான் உயர்ந்தது.

ஆனாலும் நாம் இங்கு மூன்றாம் நிலைக்குச் சாதகமாக தீர்ப்பு வழங்கப்போவதில்லை.

இரண்டாம் நிலையைத்தான் அங்கீகரித்து இரண்டாம் நிலைக்குச் சாதகமாகத்தான் தீர்ப்பு வழங்கப் போகிறோம்.

இரண்டாம் நிலையானது நமது புரிதலையும் மீறி, நம்முடைய மயக்கத்தில் தான் நடக்கிறது.

ஆகவே அதனையும் நம்மை மீறி நடப்பதாகவே எடுத்துக்கொள்ள வேண்டும்.

– தாமாகவும் இயற்கையாகவும், இயல்பாகவும் நடப்பதாகத்தான் எடுத்துக் கொள்ளவேண்டும்.

குடிபோதை போன்ற தீய பழக்கங்களுக்கு அடிமையானவர்களுங்கூட இந்த இரண்டாம் நிலையின் பிடியில் தான் மாட்டிக் கொள்கிறார்கள்.

முதல்நிலை

இரண்டாம் நிலை

மூன்றாம் நிலை

– இந்த மூன்று நிலைகளுள் முதல் இரண்டு நிலைகள்தாம் மூன்றாம் நிலையை விடவும் உயர்ந்தவை என்றால்

ஞானியை விடவும் அஞ்ஞானிதான் உயர்ந்தவன் என்றல்லவா தோன்றுகிறது.

ஏனெனில் முதல் இரண்டு நிலைகளில் செயல்படுவதற்கு எந்த ஞானமும் தேவையில்லை. அஞ்ஞானம் மட்டுமே போதுமானது.

அப்படியானால் அஞ்ஞானமே போதுமானதா? ஞானமே தேவையில்லையா?

ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் என்னதான் வித்தியாசம்?

அஞ்ஞானியைப் பொருத்த அளவில் அவனுக்கு முதல் இரண்டு நிலைகள் மட்டுமே உண்டு.

இரண்டாவது நிலைகளும் முதலாவது நிலைக்குமிடையே அவனைப்பொருத்த வரையிலும்

எப்போதும் முரண்பாடோ அல்லது உடன்பாடோ மாறிமாறி ஏற்பட்டுக் கொண்டே இருக்கும்.

அதனால் இரண்டாவது நிலையான அது தனக்கும் சுதந்திரமும் வழங்காது. முதலாவது நிலைக்கும் சுதந்திரம் வழங்காது.

ஆனால் அது எப்போதும் குற்ற உணர்வோடும், இயலாமையோடு இருப்பதாகவும் நடந்து கொள்ளும்.

அது தன்னையும், முதல் நிலையையும் முழுமையாதாக ஏற்றுக்கொள்ளாது.

அஞ்ஞானியைப் பொருத்த வரையிலும் மூன்றாவது நிலைதான் உயர்ந்த நிலை. ஞான நிலைதான் உயர்வான நிலை.

ஆனால் ஞானியைப் பொருத்த வரையிலும்

முதல் இரண்டு நிலைகளான அஞ்ஞான நிலையே உயர்ந்த நிலை.

உயர்ந்த நிலை என்பது அந்த நிலையிலேயே நீடித்திருக்க வேண்டும் என்று அர்த்தமல்ல.

அந்தநிலை இயற்கையானது. நம்மை மீறியது. தாமாக ஏற்பட்டது

– என்று முழுமையாக ஏற்றுக் கொள்வதேயாகும்.

ஆகவே

முதல் இரண்டு நிலைகளையும் தன்னிலும் உயர்ந்த நிலையாகக் கருதுவதே

மூன்றாவது நிலையின் சிறப்பியல்பாகும்.

மூன்றாவது நிலையை அடைந்தவர்களுக்கு மட்டுமே முதலிரண்டு நிலைகளை முழுமனதாக ஏற்றுக் கொள்ளும் வல்லமை ஏற்படும்.

முதல் இரண்டு நிலைகளுக்கு சுதந்திரம் வழங்குவதே ஞானத்தின் செயல்பாடு ஆகும்.



# எதிர்ப்பும் தெளிவும்

V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி:** நான் திருமணம் ஆன பெண்மணி. என்னுடைய கணவர் என்னை ஒரு பொருட்டாகவே மதிப்பதில்லை. என்னிடம் அன்பு காட்டியது, பாராட்டியது, உற்சாகப்படுத்தியது, மதித்தது என எதுவும் இதுவரை இல்லை. திருமணம் முடிந்த 10 ஆண்டுகளில் இதுவரை என்னை எங்கேயும் வெளியே அழைத்து கூடச் சென்றது கிடையாது. நான் உடல்நிலை சரியில்லாமல் இருந்தபோதும் கூட எனக்காக என்று எதுவும் செய்தது கிடையாது. அவருக்குப் பணம் மட்டும் தான் குறிக்கோள், அதுவே வாழ்வின் லட்சியம், மற்றவைகள் எல்லாம் இரண்டாம் பட்சம்தான். முழுக்க முழுக்க அவரின் தேவையின் போதும், அவரின் ஓய்வு நேரம் போன்றவற்றில் மட்டுமே என்னை பயன்படுத்திக்கொள்வார். இதனால் வாழ்க்கையில் எதிர்பார்த்து, எதிர்பார்த்து நிறைய ஏமாற்றங்களைக் கண்டுவிட்டேன். இதனால் என் மனதில் கணவரின் மீது எரிச்சலும், வெறுப்புணர்வும் அதிகமாக இருக்கிறது. இப்படியே தொடர்ந்து நீடிப்பதால் அவருடன் ஆன ஒவ்வொரு தொடர்பிலும் என்னையும் மீறி எதிர்ப்பு உணர்வையும், பழிவாங்கும் உணர்வையும் எனது மனம் வெளிப்படுத்துகிறது. என்னால் அந்த உணர்விலிருந்து விடுபட முடியவில்லை. நான் அப்படி நடந்து கொள்வது தவறு என்று தெரிந்தும் கூட என்னால் விடுபட முடியவில்லை. குற்ற உணர்ச்சி ஏற்படுகிறது, நானும் மாற்ற முயற்சி செய்து பார்க்கிறேன், எந்த மாற்றமும் ஏற்படவில்லை. பகவத் ஐயாவின் நூல்களைப் படித்து, தற்போது ஓர் அளவிற்கு அமைதி அடைகிறேன். நான் இந்த எதிர்ப்பு உணர்வு, பழிவாங்குதலை எப்படி மாற்றி அமைப்பது? எப்படி மன நிம்மதியுடன் வாழ்வது?

**பதில்:** உங்களின் கேள்வியின் மூலம் உங்களுடைய எதிர்ப்பார்ப்புகள் எதையும் அவர் புரிந்துகொண்டு செயல்படாமல், உங்களுக்குக் கொஞ்சமும் மதிப்பளிக்காமல் அன்பு காட்டாமல், இருந்திருக்கிறார் என்பது புரிகிறது.

உங்களுடைய எதிர்பார்த்தல், அன்புக்காக ஏங்குதல், உங்களை மதிக்காமை போன்ற ஒவ்வொன்றுக்கும் ஏமாற்றம் ஏற்படும் போது வெறுப்பும் ஏற்படுகிறது. இதே நிலைமை தொடர்ந்து நீடிக்கும் போது எதிர்ப்பும், வெறுப்பும் வலுப்பெறுகிறது. நீங்களும் அன்பாகக் கேட்டுப் பார்த்தும், அழுது பார்த்தும் எந்த மாற்றமும் ஏற்படவில்லை. உங்கள் கணவர் எந்த மாற்றமும் செய்யாமல் வழக்கம் போல் தன்னுடைய இயல்புப் படி நடந்து கொள்கிறார். நீங்கள் ஒரு முடிவுக்கு வந்து விடுகிறீர்கள் இவரிடமிருந்து இவ்வளவு நாட்களாக எதிர்ப்பார்த்த ஒன்று இனிமேலும் ஒருபோதும் நடக்க போவதில்லை என்று முடிவு செய்து விடுகிறீர்கள்.

உங்கள் கணவர், குடும்பத்திற்குத் தேவையான கடமைகளை ஓர் அளவிற்குச் சரியாகத் தான் செய்து கொண்டு இருக்கிறார். ஆனால் நீங்கள் எதிர்பார்த்த படி கொஞ்சமும் நடந்து கொள்ளவில்லை. மற்றபடி மது அருந்தி தகராறு செய்வது, மற்றவர்களுடன் ரகளையில் ஈடுபடுவது, பொறுப்பில்லாமல் ஊரைச் சுற்றித் திரிவது போன்ற எதுவும் அவரிடம் இல்லை. அவர் பணம் சேர்ப்பதிலேயே முழு மூச்சாக இருக்கிறார். வாழ்க்கையில் பணம் தான் எல்லாவற்றிக்கும் ஆதாரம், பணம் இருந்தால் எதையும்வாங்கவும், எதையும் செய்திடவும் முடியும் எனத் தீவிரமாக நம்பிக் கொண்டு இருக்கிறார். அதனால் தான் பணத்தைத் தவிர நீங்கள் உட்பட மற்ற அனைத்தும் இரண்டாம் பட்சமாக நினைத்து கொண்டு செயல்படுகிறார். இதற்கு அவர் வாழ்க்கையில் பணத்தால் ஏற்பட்ட பாதிப்பு திரும்ப ஏற்பட்டுவிடக்கூடாது என்பதிலே தீவிரமாக இருக்கலாம். ஏதோ உங்கள் கணவரின் பக்கம் நியாயம் இருப்பதாகக் கூறுவதாக எடுத்துக்கொள்ள வேண்டாம்.

இப்போது நாம் நம்முடைய பிரச்சினையைப் பற்றி சிந்திப்போம். உங்களுக்கு ஏற்படும் வெறுப்பு உணர்வு, பழிவாங்கும் உணர்வு போன்றவைக்கு உங்களின் எதிர்பார்ப்பு நிராகரிப்பே காரணம். நம் கணவரின் மனதில் நிச்சயம் நாம் இல்லை என்று முடிவு செய்துவிடுவதால் உங்களின் எதிர்ப்பு உணர்வு, வலிமைபெற்றுப் பழிவாங்கும் உணர்வாக மாற்றமடைகிறது. தொடர் எதிர்ப்பு உணர்வால் பழிவாங்குதல் வலிமையடைகிறது. ஏதோ ஒரு வகையில் உங்கள் கணவரைப் பழிவாங்கும்போது நீங்கள் மகிழ்ச்சி அடைகிறீர்கள். உங்கள் தரப்பில் அவர் அப்படி நடந்துகொண்டதற்கு நான் இப்படி நடந்துகொள்வது ஒன்றும் தவறு இல்லை என்று, உங்களுடைய செயலுக்கு நீங்கள் நியாயம் கற்பித்துக் கொள்கிறீர்கள். இதனால் தவறு என்று தெரிந்தும் கூட பழி வாங்குதலிருந்து உங்களால் விடுபட முடியவில்லை.

மேலும் கொஞ்சம் ஆழமாகச் சிந்திப்போம். உங்களின் பழி வாங்குதலின் செயலினால் உங்களுக்கே குற்ற உணர்ச்சி தோன்றுகிறது. உங்கள் குற்ற உணர்ச்சியை ஏற்றுக்கொள்ளவும் முடியவில்லை. பிறகு இதிலிருந்து எப்படியாவது வெளியேற வேண்டும் என்று விரும்புகிறீர்கள். உங்கள் பிரச்சினைக்கு இனி நீங்கள் எப்படி பார்க்க வேண்டும் என்பதை பார்போம்

நீங்கள் முதலில் என் கணவர் எப்படி இருந்தாலும் இனி இவருடன் தான் எனது வாழ்க்கை என்று முடிவு செய்து கொள்ள வேண்டும். கணவர் வேண்டும் என்ற முடிவோடு, இவரோடு தான் நமது வாழ்வு என்று எத்தனை சண்டை போட்டாலும் தவறுயில்லை. உங்கள் தரப்பு நியாயங்களை எடுத்துக் கூறுங்கள், அவரோடு சண்டை கூடப் போடுங்கள் தவறு இல்லை. அவ்வாறு செய்யாது மனதில் ஏற்படும் பாதிப்புகளை அடக்கிக் கொண்டு வெளியே காட்டாது உங்களுக்குள் புழுங்குவதால் தான் எதிர்ப்பு உணர்வு ஏற்பட்டு, பிறகு வலிமையடைந்து பழிவாங்கும் உணர்வாக மாற்றமடைந்துள்ளது. நீங்கள் ACயுடன் கூடிய புதியரக சொகுசு காரை எதிர்பார்க்கிறீர்கள். ஆனால் யதார்த்த வாழ்க்கையில் பழைய மாருதி வேன் தான் உங்களுக்கு அமைந்துள்ளது. இதில் AC, Power Steering, Power Window இல்லையே என்று வருத்தப்படுவதை விட்டு விட்டு நாம் நம்முடைய வாழ்க்கைப் பயணத்தை இந்த பழைய மாருதி வேனில் எப்படி மனநிறைவாகவும், மகிழ்ச்சியாகவும் பயணிப்பது என்பதில் தான் அக்கறை காட்ட வேண்டும்.

இனி அடுத்து எதிர்ப்பு உணர்வையும், பழிவாங்கும் உணர்வையும் எப்படி எதிர்கொள்வது என்று சிந்திப்போம். காலை கண்விழித்தது முதல் இரவு உறங்கும் வரை கணவருடன் 100 விசயத்தில் தொடர்பு கொள்வதாக வைத்துக்கொள்வோம். நீங்கள் தொடர்பு கொள்ளும் நிகழ்வுகளில் பெரும்பாலும் எதிர்ப்பு உணர்வும், பழிவாங்கும் உணர்வும் ஏற்படுகிறது. உங்களுக்கு ஏற்படும் இந்த உணர்வுகளை நீங்கள் விரும்பி கொண்டு வரவில்லை. உங்களையும் மீறி பாதித்த பழைய சம்பவங்களின் அழுத்தம் தானாக எதிர்ப்புணர்வாக வெளிப்படுகிறது. அப்படி ஏற்படும் எதிர்ப்புணர்வை உங்களின் கவனத்திற்குத் தெரிந்த பிறகு மேற்கொண்டு நீங்களாக நீடிக்க வேண்டியதில்லை என்பதை மட்டும் புரிந்து கொண்டால் போதும். அப்படித் தெரியும் போது அந்த உணர்விலிருந்து விடுபட்டால் போதும். இப்படி நமக்கு தெரியும் போதே எல்லாம் விடு படும் போது எதிர்ப்பு உணர்வு, பழிவாங்கும் உணர்வு என அனைத்தின் ஆயுட்காலமும் குறையும். காலப்போக்கில் மாற்றம் ஏற்படும்.

உங்களுக்குத் தெரிந்தே கூட சில நேரங்களில் வெளிப்படும் எதிர்ப்பு உணர்வும், பழிவாங்கும் உணர்வும் கூட பழைய பதிவு அழுத்தத்தின் அதிகப்படியான வெளியேற்றம் என்று எடுத்துக்கொள்ளுங்கள். தெரிந்தே நடந்தாலும் அதனோடு போராடாது, அதற்கு முழு சுதந்திரம் கொடுத்துவிடுங்கள். எந்த உணர்வுக்கும் முழுசுதந்திரம் கொடுக்கும்போது நிச்சயம் நீடிக்காது, மறையவே தொடங்கும்.

முடிந்தவரை எதிர்ப்பு உணர்வு உங்களுக்குத் தெரியும் போது மேற்கொண்டு நீடிக்காமல் முடித்துக்கொண்டால் போதும். சில நேரங்களில் அதையும் மீறி தெரிந்தே நடந்தாலும் கூட உங்களை மீறி நடப்பதாக எடுத்துக்கொள்ளுங்கள். ஒட்டு மொத்தமாக உங்களுக்குத் தெரியாமலோ, தெரிந்தோ என எப்படி நிகழ்ந்தாலும், மேற்கொண்டு நீடிக்காமல் விட்டுவிட்டால் போதும்.

ஒரு நாளில் நாம் தொடர்பு கொள்ளும் மொத்த நிகழ்வுகளில் சுமார் ஒரு 5 நிகழ்வுகளிலிருந்து விடுபட்டாலும் கூட பரவாயில்லை. மேலும் கொஞ்ச நாட்களில் 10, 20, 30, 40 என நிகழ்வுகளின் எண்ணிக்கையில் மாற்றம் ஏற்படும். கொஞ்ச நாட்களில் நமக்குத் தெரியாமல் நாமே மாறிவிடுவோம்.

உதாரணமாக நமது தெருவில் இளைஞன் ஒருவன் கண்மூடித் தனமாக தாறுமாறாக வேகமாக புல்லட் வண்டியை ஓட்டிச் செல்கிறான். இதைப் பார்க்கும் நமக்கு என்ன தோன்றும்? “இப்படி வேகமாக போகிறானே, இன்னும் கொஞ்ச தூரத்தில் எப்படியும் கண்டிப்பாகக் கீழே விழுந்து அடிபடுவான்” என்று தானே தோன்றும். இப்போது இதே புல்லட்டை நம்முடைய மகன் அப்படி ஓட்டிச் சென்றால் நமக்கு என்ன தோன்றும்? “அவனுக்கு எந்தத் தொந்தரவும் ஏற்பட்டு விடக்கூடாது என்று நினைப்போம். வீட்டிற்கு வந்தவுடன் வண்டியை நிதானமாக கவனத்துடன் ஓட்டச் சொல்லி, இப்படி எல்லாம் தாறுமாறாக ஓட்டக் கூடாது என்று லேசான கண்டிப்புடன் அவன் மீது உள்ள அக்கறையினால் கூறுவோம்.

ஒரே நிகழ்வுதான் நடக்கிறது, நம்முடையது என்றால் நாம் எப்படி அணுகுகிறோம், மற்றவர்கள் என்றால் எப்படி அணுகுகிறோம் என்பது நம் எல்லோருக்கும் தெரியும்.

இதே போல் தான் நமது கணவர் என்று பாத்தால் நமது எதிர்பார்ப்பு நடக்காது போனாலும் கூட அதற்காக நாம் சண்டை போட்டாலும் கூட அது அனைத்துமே வெறுப்புணர்வாக இல்லாமல் அன்பும், அக்கறையின் வெளிபாடாகவே இருக்கும். இவர் நமது கணவர், நமக்கு உரியவர் என்று மனதில் எடுத்துக் கொள்ளும் போது மட்டுமே இப்படி ஏற்படும். மனதில் இவரோடு சேர்ந்து வாழ்வதில் எந்தப் பிரயோஜனமும் இல்லை என்று நாமே முடிவு எடுக்கும் போது, நமது மனமே நாம் எடுக்கும் முடிவுக்கு தகுந்தாற்போல் செயல்படத் தொடங்குகிறது. அதனால் மனதில் எப்படி இருந்தாலும் இனி இவருடன் தான் வாழ்க்கை என்று தீர்க்கமாக முடிவு எடுத்துவிட்டுச் செயல்படத் தொடங்குங்கள். கொஞ்ச நாட்களில் எதிர்ப்பும், பழிவாங்கும் உணர்வு மறைந்து, அன்பும், மகிழ்ச்சியும் ஊற்று எடுத்து ஓடும்.

மனதைப் புரிந்துகொண்ட நீங்கள் தான் மனதைப் பற்றிக் கொஞ்சமும் தெரியாத உங்கள் கணவரை அங்கீகரிக்க வேண்டும். மனதின் இயக்கத்தைப் புரிந்த ஒருவர் தான் புரியாத ஒருவரை அனுசரித்து போக முடியும். புரிந்தவரால் தான் புரியாதவரிடமிருந்து மாற்றத்தை உருவாக்க முடியும்.

“புரிந்துகொண்டால் மாற்றம் ஏற்படும்”



## ஸ்ரீ பகவத் பவன் - நன்றியும் வேண்டுகோளும்

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமம் சேலம் திருவருட்சோலையில் தேனி சுவாமிகள் மற்றும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆசியோடும் நமது ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய உங்களின் பங்களிப்பாலும் ஒத்துழைப்பாலும் கீழ்த் தள வேலைகளும் முகப்பு வேலைகளும் சிறப்பாக நிறைவு செய்யப்பட்டு 20.1.2016 அன்று நமது ஞான குருமார்களால் திறந்து வைக்கப்பட்டது.

தற்போது அனைத்து வேலைகளும் நிறைவு பெறும் தருவாயில் உள்ளது. இந்தக் கட்டடப்பணியை இவ்வளவு விரைவாகவும் நிறைவாகவும் செய்து முடிக்க நமது வேண்டுகோளுக்கு செவிசாய்த்து தங்களது பங்களிப்பாக நன்கொடைகளை வழங்கிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மேலும் கட்டடப்பணியை முடிக்கும் இறுதிக் கட்டத்தில் நிதி தேவைப்பாடு அவசரமாக இருந்த சூழ்நிலையில் ஏற்கனவே நன்கொடைகள் வழங்கியிருந்த பட்சத்திலும் கூட மேலும் வட்டியில்லா கடனாக வழங்கிய

சென்னை திரு. **சரவணன் & முத்துலட்சுமி** தம்பதியினர், கரூர் திரு. **சிவகுரு** ஐயா
பரமத்திவேலூர் திரு. **பாலசுப்ரமணி** ஐயா, பரமத்திவேலூர் திரு. **இராஜகோபால்** ஐயா,
கனடா திரு. **ஜெயராம்** ஐயா, நெல்லை திரு. **மூர்த்தி** ஐயா, மற்றும்
சேலம் திரு. **வெங்கட்ராஜ்** ஐயா, ஆகிய அனைவருக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

வட்டியில்லாக் கடனாக பெறப்பட்ட தொகையை இரண்டு ஆண்டுக்குள் செலுத்த திட்டமிட்டுள்ளோம்.

இனி நமது பகவத் பவனுக்கு வரும் நன்கொடைகளையும், ஐயாவின் நூல் விற்பனையில் வரும் வருமானத்தையும் வைத்து வட்டியில்லா கடனை திருப்பிச் செலுத்த திட்டமிட்டுள்ளோம்.

அந்த வகையில் நமது பகவத் பவன் வளர்ச்சிக்காக நன்கொடைகளை வழங்கி Founder ஆக இணைத்துக் கொண்ட சென்னை, துறைபாக்கம் திரு. **சிவகுரு & உமா,** அவர்களுக்கு நன்றியை தெரிவித்துக் கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களாகிய தாங்கள் அனைவரும் மேலும் நன்கொடைகளை வழங்கி ஸ்ரீ பகவத் பவன் வளர்ச்சிக்கு உதவிடுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

– நன்றியுடன் ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.



# பாதையில் மலர்ந்த மலர்கள்



என்னுடைய இளம் வயது நண்பர் ஒருவர் சமீபத்தில் எதிர்பாராத விதமாக இறந்து விட்டார். அவர் எனக்கு மிக நெருங்கிய நண்பராக இருந்ததால், அந்தச் சூழ்நிலை என்னை எப்படிப் பாதித்தது, என்பதைப் பகிர்கின்றேன்.

நமக்கு மிக நெருக்கமான ஒருவர் இறந்து போகிறார். அவர் உடல் தகனம் செய்யப்படுகிறது. இனி அவர் இல்லை. ஆனால் அவர் பிரிவு நம்மை வாட்டுகிறது. மிகுந்த மன வருத்தத்தை ஏற்படுத்துகிறது.

அவரது பிரிவால் மனம் வருத்தமடையத் தான் செய்யும். இதுதான் மனதின் இயல்பு. ஆனால் இதே நிலை தொடர்ந்து நீடிப்பதற்கு காரணம்,

வெளியில் அவர் இறந்து விட்டாலும் எனக்குள் அவர் இறக்கவில்லை. என் மனம் அவராக வடிவமெடுத்துள்ளது. நாம் எதில் நிலை பெற்று இருக்கிறோமோ மனம் அதுவாகவே மாறிவிடுகிறது.

இப்படித் தான் என் அம்மாவாக, என் அப்பாவாக, என் மனைவியாக, என் மகனாக, என் தொழிலாக, என் வீடாக, என் ஆன்மீகமாக எதிலெல்லாம் ஈடுபட்டேனோ அது எல்லாம் நானாகவும் மனம் மாறி நிற்பது புரிந்தது.

இங்கு மனம் மாறுவது பிரச்சினை இல்லை. மனம் எதில் ஈடுபடுகிறதோ அதுவாக மாறும் என்பது எப்படி இயல்போ அதுபோல் அதன் பிம்பமாகிய "நான்" என்பதும் மாறிக்கொண்டே தான் இருக்கும் என்பது புரியாமல் மனதோடு போராடிக்கொண்டிருந்தேன், இது புரியும் போது போராட்டத்தை "நான்" கைவிடும் போது எல்லா அனுபவங்களும் தாமாக வந்து தாமாக போவதை உணர முடிந்தது.

இதை எளிமையாக புரிய வைத்த பகவத் ஐயாவும் என் மனமாக மாறி கலைந்து செல்கிறார்.

ஐயாவிடம் ஒருவர், நீங்கள் ஞானமடையும் போது எந்த வித அனுபவமாக உணர்ந்தீர்கள்? என்று கேட்டுள்ளார். அதற்கு ஐயா சொன்ன பதில்.

"அதை எந்த அனுபவமாகவும் சொல்ல முடியாது. எல்லா அனுபவமும் கலைந்து ஒரு பெரிய ஓட்டையில் விழுந்து மறைந்தது என்று சொல்லலாம். நான் அனுபவமாக இல்லை, ஒரு பெரிய ஓட்டையாக இருந்தேன்."

பிரபஞ்சத்தில் பெரியப் பெரிய 'Black Hole' அதாவது கருந்துளைகள் உள்ளனவாம். அது எங்கெங்கு நகர்கிறதோ அங்கங்கு உள்ள சூரியன், பூமி போன்ற எண்ணற்ற கோள்களை உள்ளிழுத்து போட்டுவிடுமாம். அப்படி நம் மனதில் ஏற்படும் அத்தனை மனத்துயரங்களையும் உள்ளிழுத்து போட்டுவிடும் கருந்துளைதான் ஐயாவின் ஞானப் புரிதல்.

நன்றி.

செந்தில்,டார்வின் டெய்லர்,
திண்டுக்கல், 98949 65623



## ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

தற்போது ஸ்ரீபகவத் ஐயா அவர்கள் சென்னையில் இருக்கிறார்கள், மே மாதம் நடைபெற இருக்கின்ற ஏற்காடு சிறப்பு ஞான முகாமிற்கு மே 26ம் தேதி சேலம் வர இருக்கிறார்கள்.

ஐயா சென்னையில் இருக்கும் ஒவ்வொரு வாரமும் சனிக்கிழமை மாலை மெரினா கடற்கரையிலும் ஞாயிறு மாலை வெஸ்ட் மாம்பலத்தில் உள்ள திரு.இரவிச்சந்திரன் ஐயா இல்லத்திலும் ஐயாவுடன் சத்சங்கம் நடைபெற்று வருகிறது. இதில் நேரடியாகவும் Google Hangouts-லும் பலரும் கலந்துகொண்டு தங்களது சந்தேகங்களுக்கும் கேள்விகளுக்கும் தெளிவுபெற்று பயனடைந்து வருகின்றனர்.

மேலும் ஏப்ரல் மாதம் 22, 23, 24ம் தேதிகளில் சென்னை பெரியார் திடலில் நடைபெற்ற புத்தகக் கண்காட்சியில் நமது ஐயாவின் ஞான நூல்களும் விற்பனைக்கு வைக்கப்பட்டன. இதில் சிறப்பு தள்ளுபடியாக 50% தள்ளுபடி விலையில் விற்பனைக்கு வைக்கப்பட்டு அனைத்து நூல்களும் விற்கப்பட்டன. இதை முழு முயற்சியெடுத்து ஐயாவின் நூல்களைப் பலருக்கும் கொண்டு செல்ல உதவிய நமது சென்னை உறுப்பினர் திருமதி. முத்துலட்சுமி சரவணன் அவர்களுக்கு நமது அனைவரின் சார்பாக நன்றிகளையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

நம் ஒவ்வொருவருக்குமே இந்தப் புரிதல் புரிந்த மற்றொருவரின் முயற்சியாலே கிடைத்திருக்கிறது.

ஸ்ரீபகவத் ஐயா வழங்கும் இந்த ஞானப் புரிதல் தற்போது தேடுதல் கொண்ட பலரையும் பல ஊர்களிலும் மேலும் கடல் கடந்தும் சென்றடைந்து கொண்டிருக்கிறது என்றால் அது தன்னலமற்ற பலரின் சேவைகளால் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

இந்தப் பணிகளைச் செய்பவர்கள் எவரும் மற்றவர்கள் கட்டளையின் பேரில் அவர்கள் செய்வதில்லை.

தான் பெற்ற தெளிவினால் அடைந்த பயனை மற்றவர்களும் பெறவேண்டும் என்ற உயர்ந்த நோக்கில், தன் ஆர்வத்துடன் செய்யும் பணிகளே....

பகவத் ஐயா கூறும் ஞானப்புரிதல் என்பது மனத்தின் இயற்கையான இயக்க உண்மையை புரிந்து கொள்வதேயாகும்.

நாம் அனைவரும் ஒவ்வொரு விசயத்தையும் மனத்தில் எவ்வாறு கிரகிக்கிறோமோ அவ்வாறே அவற்றைப் புரிந்து கொள்கிறோம். அனைத்தையும் புரிந்து கொள்ளும் மனத்தைப் பற்றியும் புரிந்து கொள்வதைத்தான் ஞானம் என்கிறோம். புரிந்துகொள்ளும் “நான்” னும் மனத்தின் ஓர் அம்சமே. சுருக்கமாகச் சொல்வதென்றால் “மனமே மனத்தைப் பற்றி புரிந்து கொண்டு தன்னிடமிருந்து தானே விடுதலை பெற்றுச் சுதந்திரமாக இயங்குகிறது”.

இந்நிலையே ஆன்மீகத்தில் மிக உயர்ந்த நிலையாகச் சொல்லப்படும் முக்தி நிலையாகும்.

இந்நிலையை அடைந்தவர்களின் வாழ்வே மனத்துயரங்கள் அனைத்தையும் கடந்த முழுமையான வாழ்வாக அமையும்.

ஸ்ரீபகவத் ஐயாவால் வாழ்க்கையில் பயனடைந்தவர்கள் தன்னார்வத்துடன் தான் பெற்ற தெளிவை அனைவருக்கும் எடுத்துச் செல்லும் மாபெரும் பணியை எந்த எதிர்பார்ப்புமின்றி செய்து வருகிறார்கள். அவர்களின் ஆர்வமெல்லாம் தான்பெற்ற பயனை அனைவரும் அடைய வேண்டும் என்பதே.

இந்த வகையில் ஞானத்தை மனோதத்துவரீதியாக சொல்லக்கூடிய “கவலைகள் அனைத்திற்கும் தீர்வு” நூலின் ஆங்கில வடிவமான “Smash Your Sarrows” எனும் நூலை அச்சிட நன்கொடை வழங்கிய கனடா திரு. உதயதரன் சோமசுந்தரம், பாலமுருகன் USA, திரு. ஹரிகிருஷ்ணன், (High Tech Lifts) சேலம் திரு. N. வெங்கட்ராஜ். கோவை திரு. குணாலன், சென்னை திரு. பஷீர் அகமது, சிங்கப்பூர் திரு. கார்த்திகேயன், திரு பாலமுருகன், திரு பெருமாள் இராதாகிருஷ்ணன் ஆகிய அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

**மனதை புரிந்து கொள்வோம், புரிதலை மற்றவர்களிடமும் பகிர்ந்து பயனடைய செய்வோம்.**



# 4 நாள் பயிற்சி முகாம்
# அக்குபங்சர் - குணமாக்கும் கலை

வழங்குபவர்: அக்கு ஹீலர். **அ.உமர் பாரூக்** முதல்வர்,
கம்பம் அகாடமி ஆஃப் அக்குபங்சர் - அழகப்பா பல்கலைக்கழகத்தின்
பகுதி நேரக்கல்லூரி, கம்பம். மற்றும் குழுவினர்

நாள்: **ஜூன் 23** வியாழன் காலை 9:00 மணி முதல் **ஜூன் 26** ஞாயிறு மாலை 3 மணி வரை
இடம்: **ஸ்ரீபகவத் பவன்,** சேலம்.

- மரபு வழி அறிவியலின் ஒரு பகுதியான அக்குபங்சர் மருத்துவம் மூலம் நமக்கும், நம் குடும்பத்தினருக்கும் சிகிச்சை அளிக்கும் வகையில் எளிமையான பயிற்சி.
- இயல்பான வாழ்வியல் மாற்றங்கள் மூலம் நம் ஆரோக்கியத்தை பாதுகாக்கும் வழிமுறைகள்.
- மனச்சமநிலை-உடற் சமநிலை இரண்டின் இணைவில் கிடைக்கும் அற்புதமான ஆரோக்கியம் பற்றிய புரிதல்.
- பயிற்சிக் கட்டணம்- ரூ. 5000/ (தங்கும் இடம் & உணவு உட்பட)
- செய்முறையுடன் கூடிய பயிற்சி என்பதால் குறைவான நபர்களே முகாமில் பங்கேற்க முடியும். பங்கேற்க விரும்புபவர்கள் விரைவில் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

## முன்பதிவு செய்யும் வழிகள்:

**"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission A/c No. 1590762000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள், செலுத்திய விபரத்தை **99942 05880, 97891 65555** என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.




ஸ்ரீ பகவத் ஐயா கொடுக்கும் ஞானப்புரிதலை புரிந்து கொண்ட இவர், ஞானப்புரிதல் உடல் ஆரோக்யத்திற்கு எவ்வாறு உதவுகிறது என்பதை இந்நூலின் மூலம் விளக்குகிறார்.

மனிதனுக்கு ஏற்படும் நோய்கள் மற்றும் குணமாதல் என்பது வெறும் உடலோடு தொடர்புடைய மாற்றம் மட்டுமல்ல அது மனதோடு இணைந்த மாபெரும் விளைவாகும். நோய்கள் மனதால் குணப்படுத்திக் கொள்ளும் நுட்பங்களை கற்றுத் தருகிறது இந்த நூல்.

மல்லிகை மலர் மாத இதழிகளில் வெளிவந்த கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல்.

விலை: ரூ.60/-
வெளியீடு : மல்லிகை பிரசுரம்

நூலைப் பெற
ஸ்ரீ பகவத் மிஷன், சேலம் - 3.
செல்: 99422 19065

# Smash Your Sarrows

## ஆங்கில நூல்

ஞானத்தை மனோத்தத்துவரீதியாக சொல்லக்கூடிய **"கவலைகள் அனைத்திற்கும் தீர்வு"** நூலின் ஆங்கில வடிவமான **"SMASH YOUR SARROWS"** எனும் நூலை ஏற்காடு ஞானமுகாமில் வெளியிட உள்ளோம். இந்நூல் உலக மக்கள் அனைவருக்கும் பயனுள்ள வகையில் இருக்கும். இந்நூலை குறைந்த விலையில் வெளியிட நன்கொடை வழங்கிய கனடா திரு. **உதயதரன் சோமசுந்தரம்,** திரு. **பாலமுருகன்** USA, திரு. **ஹரிகிருஷ்ணன்,** (High Tech Lifts) சேலம் திரு. N. **வெங்கட்ராஜ்.** கோவை திரு. **குணாலன்,** சென்னை திரு. **பஷீர் அகமது,** சிங்கப்பூர் திரு. **கார்த்திகேயன்,** திரு **பாலமுருகன்,** திரு **பெருமாள் இராதாகிருஷ்ணன்,** திரு. **குணசேகரன்** ஆகிய அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் வேதத்தின் அந்தத்தை முழுமையாக கூறும் ஐயாவின் நூலான **"வேதாந்தம்"** எனும் நூலின் ஆங்கில வடிவம் வெளிவர இருக்கிறது. இந்நூலை அச்சிட்டு வெளியிட நன்கொடையாளர்கள் வரவேற்கப்படுகிறார்கள். ஆர்வமுள்ளவர்கள் நன்கொடைகளை வழங்கி இந்நூல் வெளியிட உதவுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன்

**ஸ்ரீ பகவத் மிஷன்,**

சேலம்-3. செல் : 97891 65555



கனடா.
திரு. உதயதரன் சோமசுந்தரம்



சிங்கப்பூர்
திரு. கார்த்திகேயன்



சிங்கப்பூர்
திரு. பெருமாள் இராதாகிருஷ்ணன்



கோவை திரு. குணாலன்



சிங்கப்பூர். பாலமுருகன்



சிங்கப்பூர். திரு. குணசேகரன்




# மன ஊற்று

ஞானத்தைத் தேடி நாற்பதை கடந்த ஒருவன் ஞானி ஒருவருடன் சேர்ந்து தன்னுடைய பயணத்தை தொடர்ந்தான். சில மாதங்களில் பயணம் மேற்கொள்ளும் போது அவனுக்கு அவ்வப்போது காம சிந்தனை ஏற்பட்டது. அதனால் மிகவும் வருத்தப்பட்டான். 'நமது மனதில் இப்படி எண்ணம் ஏற்பட்டுக்கொண்டே இருக்கிறதே, இதை எப்படித் தான் சரி செய்யப் போகிறேனோ' என்று தெரியாமல் மிகவும் வருந்தினான்.

ஞானி அவன் மனதில் போராடுவதை உணர்ந்து "மனதில் என்ன குழப்பம்? என்ன போராட்டம்?" என்றார்.

"மனதில் காம சிந்தனைகள் வந்து கொண்டே இருக்கின்றன. என்ன செய்வது என்றே தெரியவில்லை" என்றான்.

"மனதில் அப்படித் தாமாக வருவது இயற்கை அதைப் பெரிதாக எடுத்துக்கொள்ளத் தேவையில்லை" என்றார் ஞானி.

ஆனால் ஞானியின் பதிலில் அவன் மனம் திருப்தி அடையவில்லை.

அடுத்த நாள் குளத்தில் குளிக்க சென்ற போது மாடுகள் இறங்கி குளம் கலங்கிக் காட்சியளித்தது.

ஞானி அவனைப் பார்த்து "குளம் தெளிய என்ன செய்ய வேண்டும்?" என்றார். "கொஞ்ச நேரம் அப்படியே விட்டுவிட்டால் தானாகவே குளம் தெளிந்துவிடும்." என்றான்.

அப்படித் தான் மனதை சரிசெய்ய நாம் ஒன்றும் செய்யத் தேவையில்லை என்றார். மனத்தை சரியசெய்ய தேவையில்லை என்பதைத் தெரிந்து கொண்டான். அவனுக்குள் இன்னும் கொஞ்சம் கேள்விகள் இருந்தன.

"தானாக வருகிற காம எண்ணத்தின் மீது நானாகவே சில நேரங்களில் விருப்பம் கொண்டு விடுகிறேன். எனக்கு தெரிந்தும் கூட சில நேரங்களில் என்னால் அதிலிருந்து விடுபட முடியாமல் காம சிந்தனையில் இருக்கிறேன் என்ன செய்வது ஐயா?" என்றான்.

"தெரிந்தே இருந்தாலும் உன்னால் விடுபட முடியாமல் தானே இருக்கிறாய். இதுவும் உன் கட்டுப்பாட்டில் இல்லை என்பதை புரிந்துகொள்" என்றார் ஞானி.

அவரின் பேச்சு ஆறுதல் அளித்தாலும் இன்னும் முழுமையாக விளங்கியது போல் தோன்றவில்லை.

அடுத்த நாள் பயணத்தின் போது ஒரு மலை அடிவாரத்தில் இருந்த கிணற்றிலிருந்து தண்ணீர் ஊற்று எடுத்து வெளியேறிக் கொண்டு இருந்தது.

ஞானி அந்தக் கிணற்றை காட்டித் "தண்ணீர் ஊற்று குறைவாக இருக்கும் போது தண்ணீர் கிணற்றுக்குள் இருக்கும். கிணற்றிலுள்ள ஊற்று அதிகரிக்கும் போது தண்ணீர் கிணற்றைத் தாண்டி வழிந்தோடும், இது தான் இயற்கை" என்றார்.

அதுபோல் உனக்கு ஏற்படும் அதிகப்படியான எண்ண அழுத்தம் வெளியேற உனது மனதே அதற்கான வேலையில் ஈடுபடுகிறது. அதனால் மனதில் உள்ள அதிகப்படியான எண்ண அழுத்தங்கள் ஊற்று எடுத்து வழிந்தோடுகின்றன. அதோடு முரண்படத் தேவையில்லை அதுவும் இயற்கை," என்றார் ஞானி.

கலங்கிய குளம் தெளிந்ததைப் போல் மனமும் தெளிந்தது. கிணற்றில் தண்ணீர் ஊற்று எடுப்பது போல் அதிகப்படியான எண்ண அழுத்தம் மனதிலிருந்து வெளியேறுவதும் இயற்கை என்பதைப் புரிந்து கொண்டு ஞானியிடமிருந்து விடைபெற்று, தன்னுடைய யதார்த்த வாழ்க்கையை வாழத்தொடங்கினான் அவன்.

"கிணற்றில் தண்ணீர் ஊற்று குறைவாக இருக்கும் போது நீர் கிணற்றின் எல்லைக்குள்ளும். நீர் ஊற்று அதிகரிக்கும் போது கிணற்றின் எல்லையைத் தாண்டி வழிந்தோடுவதும் இயற்கை."

Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555